மலர் 14 இதழ் 66

NAVAMANI (Tamil Daily) MADRAS

Phone No. 76190-76199

4 பக்கம் 15 காசு விமானப்பதிப்பு 18 காசு



# நவமணி

கூட்டுறவு முறையில் தொழிலாளர்கள் நடத்தும் ஒரே தமிழ்த் தினசரி

சென்னை 17-11-73 சனி வெளியூர் 18-11-73 ஞாயிறு



## ஒரு மணி நேரத்தில்
# உண்டியல் நிரம்பியது

## நெசவாளர்களுக்கு நிதி வசூல்

சென்னை, நவ. 17— நெசவாளர்களுக்காக இன்று அண்ணா தி.மு.க.வினர் நிதி வசூல் செய்துவருகிறார்கள்.

சென்னையில் முத்துச்சாமி எம். பி. திருச்சியில் கே. ஏ. கிருஷ்ணசாமி, காஞ்சியில் மனோகரன் எம்.பி. ஆகியோர் இந்த வசூலில் பங்குகொண்டனர். சென்னையில் நடத்திய வசூலில் ஒரு மணி நேரத்தில் உண்டியல் நிரம்பியது.

நெசவாளர் துயர் துடைப்பதற்காக அ தி மு க நடத்தும் நிதித்திரட்டும் இயக்கம் இன்று பல இடங்களில் நடைபெற்றது.

சென்னையில் முத்துசாமி எம். பி. தலைமையில் நிதி வசூல் செய்யப்பட்டது.

காலை 9-30 மணிக்கு முத்துசாமி, ஜேப்பியார், வண்ணை பாண்டியன் ஆகியோர் சைனா பஜார் பகுதியில் நிதி வசூல் செய்தனர்.

இவர்களைத் தொடர்ந்து ஏராளமான அ. தி. மு. க. ஊழியர்களும் வந்தனர்.

ஊர்வலமாக வருவதற்கு லைசென்ஸ் வாங்கவேண்டும் என்று போலீசார் கூறியதாக அ. தி. மு. க. பிரமுகர் ஒருவர் தெரிவித்தார்.

### உண்டியல் நிரம்பியது

சைனாபஜார் பிராட்வே பஸ் நிலையம், பிராட்வே, கொத்தவால்சாவடி ஆகிய பகுதிகளில் இவர்கள் நிதி வசூல் செய்தனர்.

வசூல் ஆரம்பித்தஒரு மணி நேரத்திலேயே முத்துசாமியிடம் இருந்த உண்டி நிரம்பியதாக தெரிவித்தனர்.

### திருச்சி

திருச்சியில் அ. தி. மு. க. அமைப்பாளர் கே. ஏ. கிருஷ்ணசாமி நிதி வசூல செய்தார்.

திருச்சி ஜங்ஷனில் இருந்து புறப்பட்டு கடைத் தெருவுகளில் நிதிவசூல் செய்யப்பட்டது.

### கிருஷ்ணமூர்த்தி சந்திப்பு

திருச்சி, கடைத் தெருவில் உள்ள தி மு க எம். எல். ஏ. கிருஷ்ணமூர்த்தியின் கடைக்கும் கே. ஏ. கிருஷ்ணசாமி சென்றார். அங்கு கிருஷ்ணமூர்த்தியிடம் சிறிது நேரம் பேசிக்கொண்டிருந்தார்.

### காஞ்சி

காஞ்சிபுரத்தில் கே. மனோகரன் எம். பி. தலைமையில் நிதி வசூல் நடைபெற்றது.

அண்ணா வீட்டில் இருந்து புறப்பட்டு போய் நிதி வசூல செய்தனர்.

தமிழ்நாட்டின் மற்ற பகுதிகளிலும் நிதி வசூல நடைபெற்றிருக்கிறது.

## சி.பி.எப். ஊழியர் கோரிக்கை: மந்திரி என். வி. என். முயற்சி வெற்றி

சென்னை, நவ. 17—1970 டிசம்பர் மாதத்தில், வருங்காலவைப்பு நிதி ஊழியர்கள் 22 நாள் வேலை நிறுத்தம் செய்திருந்தனர்.

இந்த வேலை நிறுத்த நாட்களை லீவு நாட்களாகக் கணக்கிட வேண்டும் என்று தொழிலாளர்கள் வற்புறுத்தி வந்தனர்.

முன்பு தொழிலாளர் நலத் துறை அமைச்சராக இருந்த என். வி. நடராஜன் இது தொடர்பாக மத்திய அமைச்சருக்கு வேண்டுகோள் விடுத்திருந்தார்.

இந்தக் கோரிக்கை ஏற்கப்பட்டு உத்தரவு அனுப்பப்பட்டிருக்கிறது.

அமைச்சர் என். வி. நடராஜன் செய்த முயற்சிக்கு, ஸ்டாப் யூனியன் சார்பில் பொதுச் செயலாளர் எம். கோபால் நன்றி தெரிவித்திருக்கிறார்.

## எம். ஜி. ஆர். பயணம் ரத்து ஏன்?
# மதுரை மாவட்ட அண்ணா திமுகவில் பெரும் பிளவு

## நிதிவசூலிப்பதில் தகராறு

மதுரை, நவ. 17—மதுரை மாவட்ட அண்ணா தி. மு. க.வில் பெரும் பிளவு ஏற்பட்டிருக்கிறது. அங்குள்ள 3 அமைப்பாளர்களும் மூன்று கோஷ்டிகளாகச் செயல்பட்டு வருவதனால் நிதி வசூலிப்பதில் தகராறு ஏற்பட்டுள்ளது. இந்தத் தகராறைத் தீர்ப்பதற்கே எம், ஜி. ஆர். மதுரை வருவதாக இருந்ததாகவும்; பிளவு வலுத்துவிட்டதனால் நிகழ்ச்சி ரத்து செய்யப்பட்டு விட்டதாகவும் கூறப்படுகிறது.

இதன் விவரம் வருமாறு:—

மதுரையில் அ தி மு கவின் அமைப்பாளர்களாக சங்கரபாண்டியன், அழகிரிபாலன், பட்டுராஜன் ஆகியோர் இருந்துவருவது தெரிந்ததே.

இம்மூன்று அமைப்பாளர்களும் கட்சி ஆரம்பித்த நேரத்திலிருந்தே மூன்று கோஷ்டிகளாகப் பிரிந்துள்ளனர்.

### போட்டிக் கூட்டம்

சமீபத்தில் கூட அதிமுக எம். எல். ஏ. காளிமுத்துவுக்கு நடந்த பாராட்டுக் கூட்டத்தில் பட்டுராஜன் மட்டும் கலந்துகொண்டார், மற்ற இருவரும் கலந்துகொள்ளவில்லை.

இதையடுத்து அழகிரி பாலனும் சங்கரபாண்டியனும் "திடீர்" என்று ஒன்றாகச் சேர்ந்துகொண்டு எம்.பண்டு எம். எல். ஏயை அழைத்து மறுநாளே போட்டிக் கூட்டம் வேறு நடத்தினர்.

இப்போட்டிக் கூட்டம், காளிமுத்து எம். எல். ஏவுக்கு எதிர்ப்புத் தெரிவிப்பதற்காகவே நடத்தப்பட்டது எனத் தெரிகிறது.

### "குறை தீர்க்க வாருங்கள்"

இப்படி கட்சியிலுள்ள பூசல்கள் தகராறுகள் ஆகியவற்றைத் தீர்க்க மதுரைக்கு வரவேண்டுமென்று சிலர் சென்னையில் எம். ஜி. ராமச்சந்திரனிடம் சமீபத்தில் முறையிட்டனராம்.

மதுரை வருவதற்கு தனக்கு நேரமில்லையென்று எம். ஜி. ஆர். கூறியதாக சொல்லப்படுகிறது.

### மிரட்டல் வலுக்கிறது

இப்படி கட்சியில் அமைப்பாளர்களுக்கிடையே தகராறு வளர்ந்து கொண்டே போனால் அ.திமுகவே இருக்காது இம்மூன்று அமைப்பாளர்களில் ஒருவர் கட்சியில்

(1ம் பத்தி பார்க்க)

(2ம் பத்தி தொடர்ச்சி)

இருந்து விலகப்போவதாக வேறு மிரட்டிக் கொண்டு இருக்கிறார், எனவே கட்சியின் நன்மை கருதியாவது நீங்கள் கட்டாயம் வரவேண்டும் என்று ஆதரவாளர்கள் சிலர் பலமுறை முறையிட்டு வற்புறுத்தியதைத் தொடர்ந்தே அ. தி. மு. க. விலுள்ள தகராறைத் தீர்க்கும் பொருட்டு நாளை (17-ந் தேதி) மதுரைக்கு வருவதாக இருந்தது.

### அமைப்பாளர் எதிர்ப்பு

இந்நிலையில் மதுரையில் நடக்கவிருப்பதாக அறிவிக்கப்பட்ட நிதி வசூல் நிகழ்ச்சிகளில் முகவை மாவட்டத்தைச் சேர்ந்த காளிமுத்து எம். எல். ஏ. அன்பழகன் மதுரை மாநகராட்சி உறுப்பினர் சந்தானம் ஆகியோருக்கு அ.தி.மு.க. மேலிடம் முக்கியத்துவம் அளித்திருந்ததாம். இதை சங்கரபாண்டியனும், அழகிரி பாலனும் கூட்டாகச் சேர்ந்து எதிர்த்தனர். இது தொடர்பாக அதிமுக உறுப்பினர் கூட்டத்தை நடத்தி முகவை மாவட்டத்தைச் சேர்ந்தவர்களையும் சந்தானத்தையும் மதுரை நிதி வசூல் நிகழ்ச்சியில் சேர்க்கக்கூடாது என்று ஒரு தீர்மானமும் நிறைவேற்றி எம். ஜி. ஆருக்கு அனுப்பிவைத்தனர்.

### எம். ஜி. ஆர். ஏற்க மறுப்பு

ஆனால், இதை எம். ஜி. ஆர். ஏற்றுக்கொள்ளவில்லையாம். இது சர்வாதிகாரத்தனம். இதை ஏற்றுக்கொள்ள முடியாது என்று இந்தக் கோஷ்டியினர் திருப்பவும் எதிர்ப்புத் தெரிவித்தனராம்.

### நிகழ்ச்சிகள் திடீர் ரத்து

இதனால் கோபமடைந்த தனது சுற்றுப் பயணத்தை எம். ஜி. ஆர் திடீரென ரத்து செய்துவிட்டார் என்று தெரியவருகிறது.

நெசவாளர் துயர்துடைப்பு என்ற பெயரில் எம் ஜி ஆர். மதுரைக்கு வருவதாக நோட்டீஸ் ஒட்டப்பட்டது. அவர் நாளை (17-ந்தேதி) வருவதாக அதில் குறிப்பிட்டிருந்தது.

எம். ஜி. ஆருக்கு திடீரென்று காய்ச்சல் ஏற்பட்டு படுத்த படுக்கையில் இருக்கிறார் என்றும் நிகழ்ச்சிகள் எதிலும்கலந்துகொள்ளக்கூடாது என்று டாக்டர்கள் அவருக்கு தடை உத்தரவிட்டுள்ளனர் என்றும், மறுஅறிவிப்பு வரும் வரை எந்த நிகழ்ச்சியிலும் எம். ஜி. ஆர். கலந்து கொள்ளமாட்டார் என்றும், "திடீர்" என்று இப்போது அறிவிக்கப்பட்டுள்ளது.

ராணிப்பேட்டையில் கடந்த 15-ந் தேதி துவக்கப்பட்டுள்ள தொழில் பேட்டையின் மாதிரியை, அமைச்சர்கள் மாதவன், ப. உ. சண்முகம், ஓ. பி. ராமன் ஆகியோர் பார்வையிட்டனர்.

## அரை மணி நேர டெலிபோன் பேச்சு:
# மதியழகன் - கே. ஏ. கே. கடும் மோதல்

## "மரியாதை இல்லாத இடத்தில் இருக்காதே"

சென்னை, நவ. 17—

மதியழகனும் அவர் தம்பி கே. ஏ. கிருஷ்ணசாமியும் நேற்று ½ மணி நேரம் டெலிபோனில் பேசினார்கள். இந்தப் பேச்சின் போது, கிருஷ்ணசாமியிடம் மதியழகன் மிகவும் கடுமையாக நடந்து கொண்டதாகக் கூறப்படுகிறது.

மரியாதை இல்லாத இடத்தில் (அ. தி. மு. க.வில்) எத்தனை நாளைக்கு இருப்பதுபோல் நடித்துக்கொண்டிருக்க முடியும். சீக்கிரம் அதைவிட்டு வெளியேறு என்று கிருஷ்ணசாமியிடம் மதியழகன் சொல்லியதாகத் தெரிகிறது.

நேற்று மதியழகனும் கிருஷ்ணசாமியும் ½ மணி நேரம் டெலிபோனில் பேசினார்கள்.

இந்தப் பேச்சுவார்த்தையின் போது, கிருஷ்ணசாமியைவிரைவில் அ.தி.மு.க. விலிருந்து வெளியேறி விடும்படி மதியழகன் கேட்டுக் கொண்டிருப்பதாகத் தெரிகிறது.

### தி. மு. க. வில் 50-வது இடம்

அதற்கு கிருஷ்ணசாமி பதிலளிக்கையில், நான் தி. மு. க. வுக்கு வந்தால் எனக்கு 50வது இடம்தானே கிடைக்கும். என்ன மரியாதை அங்கே கிடைத்துவிடப் போகிறது என்றுகூறினாராம்.

அதற்கு மதியழகன், 5 லட்சத்து ஓராவது இடம்கிடைத்தால் கூடப் பரவாயில்லை, ஆனால் மரியாதையே இல்லாத ஒரு இடத்தில் எத்தனை நாளைக்கு போலிப்பற்றுடன் இருந்து விட முடியும் என்று பதில் கூறினாராம்.

மேலும் மதியழகன் கூறியதாவது:—

நீ வெளிநாடு சென்றிருந்த நேரத்தில் அமைப்பாளரான நீ இல்லாத நேரத்தில் எம். ஜி. ஆர். கட்சியின் ரகசிய கூட்டத்தைக் கூட்டியிருக்கிறார்.

### உன்னிடம் பொறுப்பை தரவில்லை

அவர் (எம். ஜி. ஆர்.) வெளிநாடு சென்றிருந்தபோது, அமைப்பாளரான உன்னிடம் பொறுப்பைஒப்படைக்காமல் மூன்றாவது நபரான பொருளாளர் எஸ். எம். துரைராஜிடம் பொறுப்பை ஒப்படைத்துச் சென்றிருக்கிறார்.

தற்போது, அண்மையில் சட்டசபை கூட்டவிருக்கிறது.

### அலட்சியப் படுத்தப்பட்டாய்

என்னுடைய சட்டமன்றத் துணைத் தலைவர் பதவியை முறைப்படி சட்டமன்ற உறுப்பினர்களைக் கொண்டு தேர்ந்தெடுத்திருக்கவேண்டும், அப்படி இல்லாமல் உன்னையும் கலக்காமல், திடீரென்று எட்மண்டை அந்தப் பதவிக்கு நியமித்திருக்கிறார் எம். ஜி. ஆர். இப்படியெல்லாம் நீ அங்கே அலட்சியப் படுத்தப் பட்டிருக்கிறாய்.

இந்த நிலையில் அரை மனதுடன் எத்தனை நாளைக்கு போலி உறவுடன் அங்கே இருந்துவிட முடியும்? மேற்கண்டவாறு மதியழகன் கிருஷ்ணசாமியிடம் கூறினாராம்.

### கோபம் வேண்டாம்

அதற்கு கிருஷ்ணசாமி பதிலளிக்கையில், நான் பெரிய சோதனையிலும், நிர்ப்பந்தத்திலும் இருக்கிறேன். இந்த நிலையில் திடீரென்று நான் எப்படி வந்துவிடுவது? நானும் நடக்கின்ற காரியங்களை கவனித்துக் கொண்டுதான் இருக்கிறேன். என்னுடைய அறிக்கைகளையும் பேச்சுக்களையும் கண்டு நீங்கள் என்மீது கோபப்பட வேண்டாம்; எனக்குச் சற்று அவகாசம் கொடுங்கள்; நான் எனது முடிவை விரைவில் அறிவிக்கிறேன்.

இவ்வாறு கிருஷ்ணசாமி கூறியதும், மதியழகன் மேற்கொண்டு எதுவும் பேசாமல் டெலிபோனை வைத்துவிட்டாராம்.

என்னை 4-ம் பக்கம் சாதியுங்கள்

# அறுவை சிகிச்சைக்கு 60 ரூபாய்

கோவை, நவ. 17—குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்தின் கீழ் அறுவை சிகிச்சை செய்துகொள்கிறவர்களுக்கு அளிக்கப்படும் ஊக்கத் தொகை நடப்பு ஆண்டில் ரூ. 60 ஆக உயர்த்தப்படும் என்று தமிழக சுகாதார அமைச்சர் அன்பழகன் தெரிவித்துள்ளார்.

கோவையில் குடும்பக்கட்டுப்பாடு குறித்து 2 நாள் பிராந்திய மாநாட்டை அவர் துவக்கிவைத்துப் பேசுகையில் இவ்வாறு சொன்னார்.

அறுவை சிகிச்சை செய்து கொள்பவருக்கு இப்போது ஊக்கத் தொகையாக ரூ. 30 அளிக்கப்படுகிறது.

அமைச்சர் அன்பழகன் மேலும் பேசுகையில் குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டத்துக்கு மத்திய அரசு இவ் வாண்டில் நிதி ஒதுக்கீட்டை குறைத்து விட்டதால் தமிழ்நாட்டில் குடும்பக் கட்டுப்பாட்டு வேலை பாதிக்கப்பட்டுள்ளது என்றார். இத்திட்டத்தின் முக்கியத்துவத்தை கருதி தமிழக அரசு இவ்விதம் ஊக்கத் தொகையை அதிகரிப்பதற்கென விசேஷமாக ரூ. 50 லட்சம் ஒதுக்கியுள்ளது. தவிர, குடும்பக்கட்டுப்பாட்டு நிலையங்களை அமைக்கும் வேலைகளைப் பூர்த்தி செய்ய மேலும் ரூ 30 லட்சம் ஒதுக்கியுள்ளது என்றும் அமைச்சர் அன்பழகன் கூறினார்.

கடந்த 2 ஆண்டுகளாக குடும்பக் கட்டுப்பாட்டுத் திட்டப்பணியில் இந்தியாவிலேயே தமிழகம் முதலிடம் வகிக்கிறது. 5 லட்சம் பேருக்கு அறுவை சிகிச்சை செய்யப்பட்டுள்ளது என்றும் அவர் குறிப்பிட்டார்.

இம்மாநாட்டில் சுகாதார துறை செயலாளர் எச். எம். சிங், நீலகிரி, சேலம், தர்மபுரி மாவட்ட கலெக்டர்கள் ஆகியோர் பேசினர். கோவை கலெக்டர் சிவகுமார் மாநாட்டுக்குத் தலைமை வகித்தார்.

# நவமணி

(17—11—73) சனிக்கிழமை (18—11—73)


# இராணிப்பேட்டையில் தொழிற்பேட்டை

இராணிப்பேட்டையில் ஏழுநூற்றி ஐம்பது ஏக்கர் நிலப்பரப்பில் கனரக, இரசாயன, மின்சார, நடுத்தர, சிறு தொழில்கள் என்ற ஐந்து பிரிவுகளில் இருநூறுக்கும் மேற்பட்ட தொழிற்சாலைகள் கட்டத்தக்க ஏழரை கோடி ரூபாய் முதலீட்டில் 1975க்குள் செயல்படும் வசதியுள்ள ஒரு மாபெரும் தொழிற்பேட்டையை அமைச்சர் திரு மாதவன் தலைமையில் திறந்துவைத்தது தமிழக சரித்திரத்தில் ஒரு பொன்னேடாகும்.

வடஆற்காடு மாவட்டத்தில் பிற்பட்ட பகுதியும் சென்னை, சேலம், வேலூர் இவைகளுக்கு நடுவில் இருப்பதுமான இராணிப்பேட்டை சிறப்பு வளங்களை சந்திக்கவில்லை. இங்கு தொழில் தொடங்குபவர்களுக்கு மத்திய மாநில அரசு 15 சதவிகித உதவித் தொகை முதலீட்டைக் கொண்டு விற்பனைவரி சலுகை போன்ற எல்லா சலுகைகளையும் அளிக்கின்றனர்.

மின்சார இலாக்கா போன்ற எல்லா அரசு இலாக்காக்களும் இணைந்து தொழில் தொடங்குபவர்களுக்கு ஒரு ஒருங்கிணைப்பு திட்டத்தின் கீழ் சகல வசதிகளும் செய்து தருவதால், தொழில் ஆரம்பிப்பவர்களுக்கு மிக எளிதாக இருக்கும்.

மேலும் எல்லா இலாக்கா நிலையங்களும் அதிகாரிகளும் அங்கேயே இருப்பர்.

இருப்பினும் இவ்வளவு எல்லா வசதிகளையும் குறுகிய காலத்தில் செய்து தந்துள்ள அரசு, அங்கு தொழில் தொடங்குபவர்களுக்குக் காலதாமதமின்றி எல்லா உதவிகளையும் உடனுக்குடன் வழங்க ஏற்பாடு செய்ய வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

இராணிப்பேட்டை தொழிற்பேட்டையைப் பொறுத்தவரையில் குறிப்பிட்ட சட்டதிட்டத்திற்கு உட்பட்டு எல்லா முடிவுகளையும் இராணிப்பேட்டையில் உள்ள உயர்மட்ட அதிகாரிகளே எடுக்கக் கூடிய முறையில் அரசாங்கம் சட்டதிட்டங்களை வகுத்து உதவ வழிவகை செய்யவேண்டும் என வற்புறுத்துகிறோம்.

இராணிப்பேட்டை தமிழகத் தொழில் வளர்ச்சியில் தமிழக இராணிப்பேட்டையாக விளங்க வாழ்த்துகிறோம்.

## தி.மு.க.வை தடை செய்ய . . .

3ம் பக்கத் தொடர்ச்சி

ஜான் எழுதியிருக்கிறார் இந்த நூல, நாட்டிற்கு இதைத் தூய்மை விளக்குகிறது. தி.மு. கழகம் எந்த கருத்தை நாட்டு மக்களிடம் ஆழப்படுத்த வைக்க விரும்புகிறதோ, அந்தக் கருத்தைத் தான் ஜான் இந்த நூலில் விரிவாக எழுதிக்காட்டியுள்ளார். அதற்கு ஆதாரங்களை எல்லாம் அள்ளி அள்ளித் தந்திருக்கிறார். அது தேவைப்படுகிறது.

### தமிழ்வாணன் சொன்னது போல்

முன்பு தமிழ்வாணன் சொன்னதைப் போல ஒருமுறைக்கு இரண்டுமுறை சொல்லித்தான் தமிழ்நாட்டில் எதையும் புரியவைக்கவேண்டியிருக்கிறது. ஏனென்றால் நாம் புரியவைக்க முனையும்போதே, வேறுசிலர் அவர்களைக் குழப்பிக் கொண்டிருக்கின்றார்கள். அல்லது மாற்றுக் கருத்தைச் சொல்லுகிறார்கள்; அல்லது திரித்துப் பேசுகிறார்கள். ஆகவே நம்முடைய பிரச்சாரம், நூல்கள், மேடைப்பேச்சு, ஏடுகள் ஆகியவற்றின் மூலம் அடிக்கடி நடந்து கொண்டே இருக்க வேண்டும்.

### வேண்டுமென்றே பேசுகிறார்கள்

நாம் கேட்பது சுயாட்சியே தவிர சுதந்திரம் அல்ல. சிலர் புரியாமல் மாநில சுயாட்சி என்றால் ஒரு வேளை சுதந்திரம் கேட்கிறோமோ என்று கருதுகிறார்கள். சிலர் புரிந்துகொண்டே வேண்டுமென்றே நம்முடைய கோரிக்கையின் நியாயங்களை திசை திருப்ப வேண்டுமென்று பேசிக்கொண்டிருக்கிறார்கள். மாநில சுயாட்சி கேட்பது தவறு என்று சொல்லட்டும். நாங்கள் அதுபற்றி விளக்கமாக வாதாடத் தயாராக இருக்கிறோம்; ஆதாரங்களைக் கொண்டு வருகிறீர்களா? கொண்டு வாருங்கள். எந்த மேடையில் சந்திக்கலாம்? நாள் குறிப்பிடுங்கள், இடத்தையும் நீங்களே தேர்ந்தெடுத்து கூறுங்கள். தயாராக இருக்கிறோம். மாநில சுயாட்சி கேட்கிற நேரத்தில் மாநில சுயாட்சியைப் பிரிவினை என்று கூறினால் என்ன அர்த்தம்? மாநில சுயாட்சிக்கு பொருள் கூறுங்களால் முடியவில்லை என்றால் அதற்கு ஏன் வேறு பொருள் கூறுகிறீர்கள்? நாம் கன்னியாகுமரி வேண்டுமென்று கேட்கிறோம். கம்பலைக்கிறார் என்றால் என்ன அர்த்தம். அங்கு அதிகாரங்கள் வேண்டுமென்று கேட்பது அல்ல, ஏன் மாநில சுயாட்சி என்று கேட்கவேண்டுமென்று கூறுகிறார்கள். இது ஒரு வாதமா, நாம வேட்டி வேண்டுமென்று கேட்கிறோம். அதுதான் மாநில சுயாட்சி, அதற்குப் பதிலாக அவர்கள் நெடுங்காக ஆயிரம் நூலும், அதற்கு குறுக்காக 400 நூலும் போட்டு அதன் ஒரு முனையில் கரை போட்டு நான்கு முழமோ, எட்டு முழமோ கொண்டு ஒன்றைக் கொடு என்று சொல்கிறோம். நாம அதற்குப் பதிலாக இவ்வளவு வார்த்தைகள் வேண்டாம் வேட்டி கொடு என்று கூறுகிறோம். இன்னின்ன அதிகாரங்களைக் கொடு, இன்னின்ன உரிமைகளைக் கொடு என்று கேட்டால் போதாதா? மாநில சுயாட்சி என்றுக்க வேண்டுமா என்று ஒரு வாதம். அதற்குத்தான் இந்தப் பதிலை நான் கூறினேன்.

### பாவமான சொல் அல்ல

சுயாட்சி என்பது அரசியல் சட்டத்திலே இல்லாத ஒரு பாவகரமான வார்த்தை அல்ல. அரசியல் சட்டத்திலேயே இருக்கிறது. நாங்கள் கேட்கிறோம்; சுயாட்சி என்ற வார்த்தையைப் போட்டுவிட்டு முழுமையான சுயாட்சித் தன்மையான மாநிலங்களாக விளங்க நீங்கள் வழி வகுக்கவில்லை. அதிகாரங்கள் அனைத்தையும் அங்கே வைத்துக்கொண்டு இருக்கிறீர்கள். அந்த அதிகாரங்களை வரையறுத்துக் கொடுத்து விடுங்கள். பகிர்ந்து கொடுங்கள் என்று கூறமாட்டோம். ஏனென்றால் பகிர்ந்து கொடுத்தல், பின்னர் திரும்பப் பெற்றுக் கொள்ளலாம். அதிகாரம் உங்களிடம் இருக்கிறது. ஆகவே வரையறுத்து எவையெவை என்று திட்டவட்டமாகக் கொடுத்துவிடுங்கள்.

### அனைத்தும் என்று சொல்லவில்லை

திட்டவட்டமாக எவையெவை என்று கேட்டால் தேசப் பாதுகாப்பு, வெளிநாட்டு உறவு, நோட்டு அடிக்கிற உரிமை, மாநிலத்திற்கு மாநிலம் உள்ள போக்கு வரத்து, இவைகள் நிச்சயமாக மத்திய சர்க்காரிடம் இருக்கட்டும். மீதமுள்ள அதிகாரங்கள் எல்லாம் எங்களுக்கு வேண்டுமென்று கேட்கவில்லை; மீதமுள்ள அதிகாரங்களில் எவையெவை மத்திய சர்க்காருக்கு, எவையெவை மாநில சர்க்காருக்கு என்கிற விவாதத்தைத் தொடங்குவோம். என்றுதான் குறிப்பிடுகிறேனே அல்லாமல், அனைத்தும் மாநில சர்க்காருக்கு என்று சொல்லவில்லை;

### சரியான பதிலடி

இப்படி அதிகாரம் இல்லாத காரணத்தால் என்னென்ன தொந்தரவு வந்துவிட்டது என்று கேட்கலாம்; அவைகளைப் பற்றி ஆயிரக்கணக்கான கூட்டங்களில், புத்தகங்களில் ஏடுகளில் எழுதிக் காட்டியிருக்கின்றோம்.

புரிந்துகொண்டும் புரியாமல் நடிப்பவர்களுக்கு கொடுக்கும் சரியான பதில் அடிதான் சுயாட்சியா, சுதந்திரமா என்கிற புத்தகமாகும்; இதை அனைவரும் வாங்கிப் படிக்க வேண்டும்; இப்படிப்பட்ட நூல்களை கழகத்தவர் வாங்கிப் படிப்பது மாத்திரமல்ல, மற்றவர்களுக்குக் கிடைக்க வழிவகை செய்ய வேண்டும்.

ஜான் போன்றவர்கள் தமிழ்த்துறையில் மாத்திரமல்லாமல், ஆங்கிலத்துறையிலும் கழகத்தின் கொள்கைகளை சிந்தனைகளை, சமுதாய சீர்திருத்த, பொருளாதார கொள்கைகளை எடுத்து விளக்க வேண்டும்.

இவ்வாறு முதல் அமைச்சர் கருணாநிதி பேசினார்.

## ஆங்கில ஏடு சொல்கிறது:

# இந்தியா முழுவதும் காமராஜரின் மதிப்பு உயர்ந்துவிட்டது

சென்னை, நவ. 17—"தமிழ்நாட்டில் மட்டுமின்றி இந்தியா முழுவதும் காமராஜரின் மதிப்பு உயர்ந்துவிட்டது" என்று சென்னையிலிருந்து வெளிவரும் ஒரு ஆங்கில ஏடு பாராட்டியிருக்கிறது.

அண்மையில் பழைய காங்கிரஸ் கட்சி நடத்திய விலைவாசி எதிர்ப்புப் போராட்டம்; காந்தி நடத்திய போராட்டங்களுக்குச் சமமானது என்றும் அந்த ஏடு கூறியிருக்கிறது.

இதுகுறித்து அந்த ஆங்கில ஏட்டில் கூறியிருப்பதாவது:—

மகாத்மா காந்தி காலத்தில் அவர்வகுத்துத்தந்த சத்தியாக்கிரக அறப்போராட்டம் பயனுள்ளதாக இருந்ததைப் போன்று இன்றும் பயனுள்ளதாகத்தான் இருக்கிறது என்பதை காமராஜ் தமிழ்நாட்டில் சத்தியாக்கிரக அறப்போராட்டம் நடத்தி நிரூபித்துக் காட்டிவிட்டார்.

### அகிம்சை முறையில்

காமராஜ் தலைமையில் நடைபெற்ற விலைவாசி உயர்வு எதிர்ப்புப் போராட்டம் வெற்றிபெற்று விட்டது. மகாத்மா காந்தியின் வழி நின்று அன்று காங்கிரஸ் தொண்டர்கள் அமைதியாக பணிவோடு அகிம்சை முறையில சத்தியாக்கிரகம் செய்யச் சென்ற காட்சிகளை, காமராஜ் தலைமையில் நடந்த அறப்போராட்டம் நினைவூட்டியது.

அன்று மகாத்மா காந்தி விடுத்த அழைப்புக் குரலை ஏற்று லட்சக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்கள் சத்தியாக்கிரகப் போராட்டத்தில் குதித்தது போல் தலைவர் காமராஜின் அழைப்பை ஏற்று தமிழ்நாட்டில் பல்லாயிரக்கணக்கான காங்கிரஸ் தொண்டர்கள் அறப்போராட்டத்தில் குதித்தார்கள். தமிழக முதலமைச்சரே அமைதியான அகிம்சை முறையில் நடந்த சத்தியாக்கிரகப் போராட்டம் என்று பாராட்டும் அளவுக்கு அந்தப் போராட்டம் நடந்தது.

### நாடு முழுவதும் மதிப்பு

இதனால் தமிழ்நாட்டில் மாத்திரமின்றி நாடு முழுவதும் தலைவர் காமராஜ் மதிப்பு உயர்ந்து, மகாத்மா பயிற்சி வழிவந்த தலைவர் என்பது நிரூபணமாகிவிட்டது. தமிழ்நாட் இதன் மூலமாக அவரது தலைமையில் உள்ள காங்கிரஸ் பெரும்பலம் பெற்றுவிட்டது.

மேற்கண்டவாறு அந்த ஆங்கில ஏட்டில் எழுதப்பட்டுள்ளது.

# தலைமை செயலக ஊழியர்கள் க்ஷேமநலம்: புதிய யோசனை

சென்னை, நவ. 17—தலைமை செயலகத்தில் பணிபுரியும் சிப்பந்திகள் ஓய்வு பெற்றுச் செல்லும்போது அவர்களுக்கு பண முடிப்பு அளிக்க புதிய திட்டம் ஒன்றை சு. குமரேசன் என்பவர் தெரிவித்திருக்கிறார்.

இவரது திட்டத்தின்படி, தலைமைச்செயலகத்தில் பணிபுரியும் எல்லா ஊழியர்களிடமும் மாதா மாதம் ரூ. 5 வீதம் பிடிக்கப்பட்டு அரசாங்க சேமிப்பு நிதியாக தனிக் கணக்கில் வைக்கப்பட வேண்டும்;

இது குறித்து அரசு ஆணை பிறப்பிக்குமானால் ஓய்வு பெறும் ஊழியர்களுக்கு கீழ்க்கண்ட முறையில் பண முடிப்பு தரலாம் என்று அவர் யோசனை தெரிவித்திருக்கிறார்:—

அரசு ஆணைக்குப் பிறகு ஒரு ஆண்டில் ஓய்வு பெற்றால் ரூ. 1,500, இரண்டு ஆண்டில் ஓய்வு பெற்றால் ரூ. 3,000, மூன்று ஆண்டில் ஓய்வு பெற்றால் ரூ. 4,500, நான்கு ஆண்டில் ஓய்வுபெற்றால் ரூ.6,000, ஐந்து ஆண்டில் ஓய்வு பெற்றால் ரூ. 7500, ஆறு ஆண்டில் ஓய்வு பெற்றால் ரூ. 9000 அதற்குமேல் ஓய்வு பெறுகிறவர்களுக்கு ரூ. 10,000 வழங்கலாம்.

## சென்னை

# மாநகராட்சி ஊழல் விவகாரம் வெளியானது எப்படி?

சென்னை; நவ. 17. சென்னை மாநகராட்சி மின்சார இலாகாவில் நடைபெற்ற ஊழலை முதலில் மாநகராட்சி தி. மு. க. உறுப்பினர்களே கண்டுபிடித்துக் கூற, இது பற்றி உடனடி நடவடிக்கை எடுக்க முதலவர் கருணாநிதி உத்தரவிட்டார் என்று மாநகராட்சி வரி விதிப்பு நிதிக் கமிட்டித் தலைவரான எஸ். எம். கிருஷ்ணன் (தி. மு. க.) நிருபர்களிடம் கூறினார்.

"நானும் வரி விதிப்பு நிதிக் கமிட்டியின் தி. மு. கழக உறுப்பினர்களும்தான் முதன்முதலில் மாநகராட்சி மின்சார இலாகா ஊழல் பற்றி ஆராய முற்பட்டோம். அதன் விளைவாகவே மின்சார எஞ்ஜினீயர் உட்பட சில அதிகாரிகள் சஸ்பெண்ட் செய்யப்பட்டுள்ளனர்" என்று எஸ். எம். கிருஷ்ணன் கூறினார்.

அவர் மேலும் சொன்னதாவது:—

மின்சார இலாகாவில் ஒழுங்கீனங்கள் நடைபெற்று வருவதாக நாங்கள் 2 மாதங்களுக்கு முன்பே கேள்விப்பட்டோம்.

செப்டம்பர் 28-ந் தேதியும் 30-ந் தேதியும நானும் கமிட்டியின் சில உறுப்பினர்களும் நகரிலுள்ள மாநகராட்சி மின்சார இலாகாவைச் சேர்ந்த எல்லா ரேஞ்ச் சூப்பர்வைசர் ஆபிசுகளுக்கும் சென்று சோதித்தோம். பிறகு அக்டோபர் 8-ந் தேதி மின்சார ஊழியர்களுக்கு சம்பளம் அளிக்கப்பட்டபோது எங்களுடைய சந்தேகங்கள் ஊர்ஜிதம் ஆகின. அக்டோபர் 10-ந் தேதியன்று நாங்கள் மாநகராட்சி கமிஷனரை சந்தித்து இது பற்றி விசாரிக்க நடவடிக்கை எடுக்குமாறு கோரினோம்.

நாங்கள் சேகரித்த தகவல்களுடன் முதலமைச்சர் கல்வி அமைச்சர் உள்ளாட்சித் துறை அமைச்சர் ஆகியோரை சந்தித்தோம். எங்கள் அறிக்கையைப் படித்த முதலமைச்சர் இந்த ஊழல் புகார் பற்றி உடனே நடவடிக்கை எடுக்க உத்தரவிட்டார்.

மாநகராட்சி தி. மு. கழக முயற்சியின் பேரில் இந்த ஊழல் பற்றி ஆராயப்படுகிறது என்று தெரிய வந்ததும் மாநகராட்சி பழைய காங்கிரஸ் தலைவர் கே. குப்புசாமி இதுகுறித்து ஒரு தீர்மானம் கொண்டுவர அது ஒருமனதாக நிறைவேற்றப்பட்டது.

இவ்வாறு எஸ். எம். கிருஷ்ணன் கூறினார்.

# மருத்துவ மனையில் கம்யூனிஸ்டு எம். பி.

சென்னை, நவ. 17—கம்யூனிஸ்டு எம். பியான காத்தமுத்து சென்னை ஜெனரல் ஆஸ்பத்திரியில் அனுமதிக்கப்பட்டிருக்கிறார்.

கடந்த 8-ந் தேதியன்று டெல்லிக்குச் செல்ல, சென்ட்ரல் ரெயில் நிலையத்தில் ரெயில் ஏறிய 10 நிமிடங்களில் அவருக்கு மயக்கம் ஏற்பட்டது; உடனே மருத்துவ மனையில் சேர்க்கப்பட்டார்.

அவரது உடல் நிலை தற்போது தேறி வருகிறது. கட்சித் தோழர்களும், நண்பர்களும் உடல் நலம் விசாரித்து வருகின்றனர்.

## நீர் மட்டம்

சென்னை, நவ. 13—

| | | |
|---|---|---|
| மேட்டூர் | 80·68 | அடி |
| பெரியாறு | 5 03 | " |
| வைகை | 18 32 | " |
| பாபநாசம் | 19 43 | " |
| கிருஷ்ணகிரி | 15·54 | " |
| சாத்தனூர் | 38·71 | " |
| மணிமுத்தார் | 14·02 | " |
| பேச்சிப்பாறை | 5 37 | " |
| பெருஞ்சாணி | 9 56 | |

# நரிக்குறவருக்கு காலனி

மதுரை, நவ. 17—நாடோடியாகத் திரியும் நரிக்குறவர்களுக்கென ராமநாதபுரம் மாவட்டத்தில் சிவகங்கை அருகே பிள்ளைவயலில் ஒரு காலனி அமைக்கப்படும்.

இத் தகவலை ராமநாதபுரம் மாவட்ட கலெக்டர் கே. சந்திரசூடன் தெரிவித்தார். இக் காலனியில் 64 நரிக்குறவர் குடும்பங்கள் குடியேற்றப்படுவர். இவர்களுக்கு ஏற்கெனவேவீட்டு மனை நிலங்கள் அளிக்கப்பட்டுள்ளன.

அருப்புக்கோட்டை அருகே பலவநத்தம் என்னுமிடத்தில் செப்டம்பர் 20-ந் தேதி போலீசார் நடத்திய துப்பாக்கிச் சூட்டில இறந்தவருடைய குடும்பத்துக்கு தமிழக அரசு ரூ 1000 நிதி உதவி வழங்கியுள்ளதாகவும் கலெக்டர் தெரிவித்தார்.

# ரேஸ் செய்தி

# நாளை ஞாயிறு ரேசுக்கு டிப்ஸ்

சென்னை; நவ, 17—நாளை கிண்டியில் மொத்தம் 7 பந்தயங்கள் நடைபெறும். இவற்றில் பங்குகொள்ளும் குதிரைகள்; ஜாக்கிகளின் பெயர்கள்; டிரா நம்பர்; டிப்ஸ் ஆகியன கீழே கொடுக்கப்பட்டுள்ளன.

**1. ஜூனியர்ஸ் பிளேட்**
(1000 மீட்டர்) (1·45 மணி)

1 அவர் எம்பிரர் 54·00 — போல—3
2 உமானந்த் 54·00 — ஸ்டில்—5
3 லாஸ் பால்மாஸ் 54—00 — தாமஸ்—4
4 காட்சன் 54·00 — கஸ்ட்—7
5 டேடரன் 54·00 — கரன்சிங்—9
6 குளோரி ஆப்கங்கா 54·00 — பிட்ஸ்ஜெரால்ட்—1
7 லேட்டிஸிங் வெஞ்சர் 52·50 — ரகுமான்—11
8 லவ்லி ஸ்மிதா 52·50 — மஞ்சே—10
9 சொரையா 52·50 — ரெட்டி—2
10 மைட்டி பிளான் 52·50 — எஸ். மார்ஷல்—6
11 விஜேதா 52·50 — ஸ்டீபன்ஸ்—8

டிப்ஸ்
1. குளோரி ஆப் கங்கா
2. அவர் எம்பிரர்

**2. ஊட்டி கப்**
1,600மீட்டர் 2·15 மணி

1. ஹண்டர்ஸ் மூன் 60·00 — தாமஸ்—1
2. கிளாஸ்கோ ஜெட் 54·00 — எஸ். மார்ஷல்—4
3. கிராண்ட் ஹாவன் 53·50 — கஸ்ட்—2
4. பிரண்ட்லி நைட் 49·00 — ஸ்டில்—3

டிப்ஸ்:
1. பிரண்ட்லி நைட்
2. கிராண்ட் ஹாவன்

**3. பம்பாய் பிளேட்**
1200 மீட்டர் 2·55 மணி

1 ஸ்கார்லட் பிரின்ஸ் 60·00 — சுகுமார்—2
2 சம்மர் கோர்ட் 60·00 — கஸ்ட்—5
3 கிரீன் பிளாஷ் 53·50 — எஸ். மார்ஷல்—1
4 கிங்ஸ் பிராலிக் 55·00 — கரன்சிங்—4
5 லோரலய் 46·50 — தாமஸ்—3

டிப்ஸ்:
1 கிரீன் பிளாஷ்
2 லோரலய்

**4. ஷில்லாங் பிளேட் டிவி. 1**
1400 மீட்டர் 3·30 மணி

1 பீட்டர்க்ஸ் பாட்டர் 60·00 — தாமஸ்—2
2 பிளேவர் 57·50 — எஸ் மார்ஷல்—4
3 பெட்டர் பாய் 56·50 — மகமது அகமது—3
4 சிவசங்கர் 52·00 — ஸ்டீபன்ஸ்—5
5 ரெட் ஆர்க்கிட் 50·50 — என். அகமது—1
6 சாம்ராட் அசோக் 48·50 — புனசா—7
7 விளாடிமிர் 47·50 — போலி—6
8 சன்ரைஸ் 45·50 — ஜி. கரன்—8

டிப்ஸ்:
1. சிவசங்கர்
2. விளாடிமிர்

**அசுவகோஷ் டிப்ஸ்**

1. மைட்டி பிளான்
2. பிரண்ட்லி நைட்
3. கிரீன் பிளாஷ்
4. விளாடிமிர்
5. யோகி பேர்
6. பிரைட் ஆப் கங்கா
7. ராக் ராயல்

நிச்சய வெற்றி
கிரீன் பிளாஸ்

**5. கர்னாடகா பிளேட்**
1600 மீட்டர் 4·05 மணி

1. பிரின்ஸ் பாரத் 60·00 — மசூத்—5
2. விஞ்சஸ்டர் 59·50 — எஸ். மார்ஷல்—7
3. பிளேயிங் குவின் 53·50 — எஸ். மார்ஷல்—6
4. ராயல் ரொமான்ஸ் 53·50 — பிரிசன்—4
5 பாலூஸ் சாய்ஸ் 49·00 — ஸ்டீபன்ஸ்—1
6 அக்வொயஸ் 47·50 — கிரிபால் சிங்—2
7 யோகி பேர் 45·50 — ஸ்டில்—3

டிப்ஸ்;
1. யோகி பேர்
2. பிளேயிங்குவீன்

**6. ஷில்லாங் பிளேட் டிவி. 2**
1400 மீட்டர் 4·40 மணி

1 கோல்டன் டால் 60·00 — புனசா—7
2 பிரைட் ஆப் காப்கா 59·00 — கஸ்ட்—3
3 ரம்மி அண்ட் ஷோ 55·00 — எஸ். மார்ஷல்—1
4 பிரைவி ஜஸ்டிஸ் 52·50 — பிரிசன்—5
5 குவரன் குங் 50·50 — என். அகமது—6
6 ராயல் ஹாவன் 49·50 — நாதுசிங்—4
7 சுல்தான்பெவிஸ் 48·50 — எஸ். மார்ஷல்—2

டிப்ஸ்:
1 பிரைட் ஆப் கங்கா
2 பிரைவி ஜஸ்டிஸ்

**7. ஆக்ரா பிளேட்**
(1600 மீட்டர்) (5-15 மணி)

1 காப்பர்பீல்ட் 60·00 — தாமஸ்—3
2 ஜயீபவ 59·00 — நாதுசிங்—8
3 ராக்ராயல் 59·00 — கஸ்ட்—4
4 ஸ்டார் டிரெக் 56·50 — பிகராபேர—7
5 துஷார் 56·00 — மகமது அகமது—9
6 குவீன் ஆப் குவீன்ஸ் 46·00 — எல். மார்ஷல்—5
7 சுந்தர் பன்ஸ் 45·50 — கதம்—6
8 ஹோம் ஸ்டிரெச் 45·50 — புனசா—2
9 லயன் ஹார்ட்டட் 45·50 — என அகமது—1

டிப்ஸ்
1. ராக் ராயல்
2. ஸ்டார் டிரெக்

ஜாக்பாட்:
3, 4, 5, 6, 7-வது பந்தயங்கள்.

டிரெபிள்:
5, 6, 7வது பந்தயங்கள்.

டபுள்:
6, 7வது பந்தயங்கள்.

தனலா:
4, 6-வது பந்தயங்கள்

# வான வெளியில் 84 நாள் வாசம்

வாஷிங்டன், நவ. 17—ராக்கெட்மூலம் நேற்று வான வெளிக்கு அனுப்பப்பட்ட 3 அமெரிக்க வானவெளி வீரர்கள், ஏற்கெனவே வான வெளியில் இருந்தபடி பூமியைச் சுற்றிவரும் அமெரிக்க விண்வெளிக் கலத்தை எட்டிப் பிடித்துவிட்டனர். "ஸ்கைலாப்" என்னும் இந்த விண்வெளிக் கலத்தில கார், போக், கிப்சன் ஆகிய மூவரும் சுமார் 3 மாத காலம் அதாவது 84 நாட்கள் தங்கியிருப்பர்.

முன்னர் இருமுறை அமெரிக்க வானவெளி வீரர்கள் இந்த விண்வெளிக் கலத்தில் தங்கி ஆராய்ச்சி நடத்தினர் என்பது நினைவிருக்கலாம்.

எனினும் இப்போது சென்ற மூவரும் இதுவரை யாரும் இருந்திராத அளவுக்கு நீண்ட காலம் வானவெளியில் தங்கியிருப்பர்.

